26th April 1962]

SRI C. CHIRANJEEVULU NAIDU: Will the Government consider the desirability of distributing the CARE materials at the school centres instead of at the taluk range headquarters, as it is causing a lot of hardship to take the CARE materials and also a lot of time is wasted?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The Government have no such proposal.

*Letters of the opposition party members (censorship)*

* 11 Q.—SRI SAW. GANESAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சுதந்திரக் கட்சியைப் போன்ற எதிர்கட்சி அலுவலங்களுக்கும் எதிர்கட்சியைச் சேர்ந்த முக்கியஸ்தர்களுக்கும் வரும் கடிதங்களும், அவர்களால் அனுப்பப் பெறும் கடிதங்களும் ரகசிய போலீஸாரால் உடைத்துப் பார்த்துச் சோதனை செய்யும்படி அரசாங்கம் உத்தரவிட்டிருக்கிறதா?

(இ) அப்படியானல், காரணமென்ன?

(உ) இல்லையென்ருல், அப்படி நடப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) to (c) The Government regret they have to decline to answer the question in the public interest.

SRI SAW. GANESAN: ஏற்கெனவே இதுமாதிரி ஒரு வினு இதே மன்றத்தில் எழுப்பப்பெற்று அதற்கு பதில் சொல்லி இருக்கிருர்களே. அதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: என்ன பதில் என்பது எனக்கு நினைவு இல்லை.

SRI M. KALYANASUNDARAM: எதிர்க்கட்சிகள் எல்லாவற்றையுமே அரசாங்கம் கண்காணித்து வருகிறது. ரகசிய போலீசாரும் பின்தொடர்ந்து வருகிருர்கள், கடிதங்களை பரிசீலனை செய்கிருர்கள் என்பது ரகசியம் அல்ல. அப்படியிருக்கும்போது அதை வெளியிட்டால் என்ன ஆபத்து ஏற்படும் என்று அரசாங்கம் கருதுகிறது என்பதை நான் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் அனுபவம் வாய்ந்தவர். ரகசியமாக ஒரு காரியம் அரசாங்கம் செய்கிறதென்று சொன்னல், அதை வெளியிடுவது முறையல்ல, உசிதமல்ல, புத்திசாலித்தனமும் அல்ல என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

[26th April 1962

SRI T. L. SASIVARNA THEVAR : முன்பெல்லாம் கடிதங்களைப் படித்துவிட்டு துரிதமாகத் திருப்பி அனுப்பி விடுவது வழக்கம். ஆனால் நமது அரசாங்கத்தில் கடிதத்தை அப்பஸ் செய்துவிடுகிறார்களே, அம்மாதிரி உத்தரவு போட்டிருக்கிறார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒன்றும் அபேஸ் செய்யப்படுவதில்லை. அத்தகைய உத்தரவு ஒன்றும் இல்லை.

SRI M. KALYANASUNDARAM : ரகசியங்களைப் பற்றி ஒன்றும் கேட்க வில்லை. எந்த எந்தக் கட்சிகளின் மீது கண்காணிப்பு இருக்கிறதென்று சொல்ல முடியுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குறிப்பிட்ட கட்சிக்கு என்று உத்தரவு ஒன்றும் கிடையாது. யார் யார் மீது கவனம் இருக்க வேண்டுமென்று—அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்கிறது. முறைதவறி போலீசார் எங்கேயாவது நடந்து கொண்டிருக்கிறார்கள் என்றால் அதுபற்றி குறிப்பாகப் புகார் செய்யப்பட்டால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI K. S. MANI : கடிதங்களைப் பிரித்துப் பார்க்கும் அதிகாரத்தை எந்த அதிகாரிக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே சொன்னேன். பொதுநன்மையையொட்டி அந்தச் செய்திகளையெல்லாம் வெளியிடுவது சரியல்ல.

SRI K. R. NALLASIVAM : சந்தேகத்திற்குரிய ஆளும் கட்சி அங்கத்தினர்களின் கடிதங்களும் பரிசீலனை செய்யப்படுகிறதா என்று அறிய விரும்புறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சந்தேகத்திற்குரிய ஆளும் கட்சியினர் என்று சொல்வது சரியல்ல. குறிப்பாக ஏதாவது தகவல் வேண்டுமென்று கருதுகிறபோது நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுகிறது.

SRI SAW. GANESAN : இப்படிச் செய்வதை துரிதமாகவாவது செய்து அந்தக் கடிதங்கள் சம்பந்தப்பட்டவர்களுக்கு அன்றையதினமே கிடைக்க வழி செய்வார்களா? ஒவ்வொரு கடிதம் நான்கு நாட்களுக்குமேல் தாமதிக்கப்பட்டு அது வந்து சேருவதற்குள் அந்தக் காரியமே முடிந்து விடுகிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குறிப்பாக ஏதாவது தகவல் அனுப்பினால், புகார் செய்து கொண்டால் அதைப்பற்றி விசாரித்து நடவடிக்கை எடுக்கலாம்.